# இயலிசை

தனி பிரதி விலை 60 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 15-12-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 14/16


## 'இசைமணி' சீர்காழி கோவிந்தராசன்

தஞ்சை மாவட்டம் சீர்காழியில் 1933ல் சீர்காழி கோவிந்தராசன் பிறந்தார். தனது 14 வது வயதில் சென்னை தமிழிசைச் சங்கத்தில் இசைப் பயிற்சியினைத் தொடங்கி1950-ல்,இசைமணி' ஆனார் பின்னர் அரசினர் இசைக் கல்லூரியல் பயின்று 'சங்கீத வித்வான்' பட்டமும் பெற்றார் அப்பொழுது அக்கல்லூரியின் இசைப் பேராசிரியராக இருந்த பிரபல புல்லாங்குழல் கலைஞர் திருப்பாம்புரம் N. சுவாமிநாத பிள்ளையின் முதல் மாணவனாகி குருகுலவாசம் செய்து தனது கலைத் திறனை வளர்த்துக் கொண்டார்.

பல இசை நிகழ்ச்சிகள் நடத்த ஆரம்பித்தார். இவரது அழகான குரலாலும், ஞானத்தாலும், தெளிவாக தமிழில் பாடுவதாலும் பண்டிதன் முதல் பாமரன் வரை அனைவரையுமே கவர்ந்தார். திரை உலகிலும் வாய்ப்பு கிடைத்தது. திரை உலகப் பிரவேசம் இவரது வளர்ச்சிக்கும் புகழுக்கும் பெரிதும் துணை நின்றது. ஏராள தமிழ்ப் படங்களிலும், சில தெலுங்கு, மலையாள, கன்னட படங்களிலும் பாடினார். 'திருமலை தென்குமரி' 'அகஸ்தியர்' முதலிய சில படங்களில் பாடிநடித்துள்ளார்.

பக்தி பாடல்கள் இசைத்தட்டுகள் ஏராளமாக பாடினார் இவரது இசைத்தட்டுகளுக்குள் என்றும் எங்கும் நல்ல வரவேற்பு. இசைத் தட்டு மன்னன் ஆனார். இவரது



பாடல்களை வானொலியில் ஒலி பரப்பாத நாட்களேகிடையாது.

பல முறை வெளி நாடுகள் சென்று கச்சேரிகள் செய்தவர். 1978ல் லண்டன், பாரீஸ் இடங்களில் இவர் பாடிய இசை நிகழ்ச்சிகள் அப்படியே நீண்ட HMV இசைத்தட்டுகளாக வெளிவந்தன.

ஏராள பட்டங்கள் பரிசுகள் பெற்றவர். அதில் தமிழக அரசின் 'கலைமாமணி, கோலாலம்பூர் சங்கீத அபிவிருத்தி சபையின் 'பேரிசை மணி, முத்தமிழ்ப் பேரவை 'இசைச் செல்வம்' 1980-ல் மத்திய சங்கீத நாடக அகடமி விருது இவைகள் குறிப்பிடத்தக்கவை. இன்று தமிழக அரசவைக் கலைஞராக விளங்குகின்றார். இவரது மகனார் S G சிவசிதம்பரமும் உடன் பாடி வருகின்றார்.

தமிழிசை வளர்ச்சிக்கு இவர் ஆற்றும் தொண்டு அளப்பரியது. அன்பும், பண்பும், நிறைந்த குரு பக்தியும் உடையவர். இவருக்கு இவ்வாண்டு 'இசைப் பேரறிஞர்' பட்டம் வழங்கும் தமிழிசைச் சங்கத்திற்கு நமது வாழ்த்து!

## திருவாளபுத்தூர் T. A. கலியமூர்த்தி தவில் கலைஞர்

தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறை அடுத்த திருவாளபுத்தூரில் V. அருணாசலப் பிள்ளை ராஜாமணி அம்மாளுக்கு 1947ல் பிறந்தவர் T. A. கலியமூர்த்தி 5 வயது முதல் தாய்மாமன் S. கதிர்வேல்பிள்ளையவர்களிடமும், பின்னர் திருவாளபுத்தூர் பசுபதிப்பிள்ளையவர்களிடமும் தவில் வாசிக்கக் கற்றுக்கொண்டு 12 வயது முதல் நாதசுரக கச்சேரிகளுக்கு



வாசிக்க ஆரம்பித்தார். 17வது வயதிலேயே தனித்தவில் கலைஞராகி பல பிரபல நாதசுரக் கலைஞர்களுக்கும் வாசிக்க

—தொடர்ச்சி 8ம் பக்கம்

## 'பத்மபூஷண்' வீணை S. பாலச்சந்தர்



1927ல் சென்னையில் S. பாலசந்தர் பிறந்தார். ஆறு வயதிலே கஞ்சிரா, தபலா முதலியன வாசிக்க கற்றுக்கொண்டு தனது சகோதரர் S. ராஜம் அவர்களது இசைக்கச்சேரிகளுக்கு வாசித்து வந்தார். 1938இல கராச்சியில் இவர்கள் ஒரு நிகழ்ச்சி நடத்திய போது பாலசந்தருக்கு ஒரு சிதார் பரிசு கிடைத்தது. இதனை தானே வாசிக்கப் பழகி நன்கு வாசித்தார். சில காலம் சென்னை வானொலியில் நிலைய கலைஞராக இருந்து பல இந்திய இசைக் கருவிகளை வாசித்தார்.

பின்னர் இவரது வாழ்வில் ஓர் திருப்பமாக கலைத்தாய்சரஸ்வதி கையிலிருக்கும் வீணையைக் கண்டு அதனை வாசிக்க பேரார்வம் கொண்டு பயின்று 1943இல் தனது முதல் வீணைக் கச்சேரியைச் செய்து பெயர் பெற்றார். இவரது தந்தையார் சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்தவர் அவரது இல்லத்திற்கு அக்கால பெரிய மேதைகள் அடிக்கடி வருவார்கள். அவர்களுடன் பழகவும், தனது திறனை வளர்த்துக் கொள்ளவும் இவருக்கு நல்ல வாய்ப்புகள் கிடைத்தன வீணை வாசிப்பதில் தனி பாணியை (முறையை) வைத்து கொண்டு புகழையும் வளர்த்து கொண்டார்.

நாடு முழுவதும் கச்சேரிகள் செய்தார். பல முறை வெளி நாடுகள் சென்று வீணை நிகழ்ச்சிகள் நடத்தினார். வெளிநாடுகளில் இவருக்கு ஏராளமான ரசிகர்கள் உள்ளனர். கர்நாடக இசை நீண்ட நேர இசைத் தட்டுகளில் L P அதிகம் வாசித்தவர் இவரே 25 இசைத் தட்டுகள் வெளி வந்துள்ளன இதில் இவர் வெங்கடமகியின 72 மேள கர்த்தா ராகங்களை 12 நீண்ட இசைத் தட்டுகளில்



வாசித்து கர்நாடக இசை உலகுக்கு வழங்கியது குறிப்பிடத்தக்கது.

இவர் திரை உலகிலும் தொடர்புடையவர் நடிகர். இசை இயக்குநர், திரை இயக்குனர் (DIRECTOR) ஆக இருந்துள்ளார். தமிழ் திரை உலகுக்கு "அந்த நாள்", "பொம்மை" "நடு இரவில்" போன்ற புதுமை படங்களை தந்தவர்.

வீணைக் கலைஞராக இவர் கிட்டத்தட்ட 50 பட்டங்கள் விருதுகள் பெற்றுள்ளார். அவற்றில் 1968-இல் சென்னை சங்கீத நாடக சங்க "கலாசிகாமணி" இந்திய இசைக்கலைஞர்கள் சார்பில் அறிஞர் அண்ணா வழங்கிய "வீணைவரப்பிரசாத்", 1909-இல் டெல்லி சங்கீத நாடக அகடமி விருது, 1980 இல் முத்தமிழ்ப்பேரவை "இசைச் செல்வம்". நியூயார்க்கில் வழங்கிய "சங்கீத சகரவர்த்தி." மற்றும் 1982-இல் மாபெரும் தேசிய விருதான "பத்மபூஷண்" முதலியன குறிப்பிடத்தக்கவை. மேற்கு வங்காள "விஸ்வ உன்யாயன் சம்பத்" என்ற பெரும் கலாசார நிறுவனம் இவருக்கு "பாரத சங்கீத மேதை" எனவும் பட்டங்கள் வரும் ஆண்டில் வழங்க உள்ளது. இவ்வாண்டில் நடைபெறும் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி தங்க ஆண்டு இசை விழாவிற்கு தலைமை வகித்து "சங்கீத கலா சிகாமணி" விருது பெறுகின்றார்.

## 'முத்தமிழ்ப்பேரவை' கலைவிழா 1983

1-1-83 முதல் 7-1-83 வரை சென்னை மயிலை யோகலட்சுமி கல்யாண மண்டபத்தில் நடைபெறும். டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் துவக்கிவைத்து கீழ்க்கண்டவாறு விருதுகள் வழங்குகின்றார்.

| | | |
|---|---|---|
| எழுத்தாளர் சாண்டில்யன் | — | 'இயல் செல்வம்' |
| K N பக்கிரிசாமி பிள்ளை | — | 'நாட்டியச் செல்வம்' |
| Dr N. ரமணி. | — | 'இசைச் செல்வம்' |
| 'மதுரை M P N சகோதரர்கள்— | | 'நாதசுர செல்வம்' |
| அரித்துவாரமங்கலம் பழநிவேல் | — | லயசெல்வம் |
| திருவாளபுத்தூர் கலியமூர்த்தி | — | " |

# தி இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி

## 50 - வது தங்க ஆண்டு தென்னிந்திய இசை மாநாடும் இசை விழாவும் 1982 - 83

இடம்: சுவாமி சங்கரதாஸ் கலையரங்கம், தி. நகர், சென்னை-17

### நிகழ்ச்சி குறிப்புகள்

மாநாட்டுத் தலைவர் வீணைக்கலைஞர் பத்மபூஷண் திரு. S. பாலசந்தர்

**17—12—82**

மாலை 4-30 அடையாறு G. வாசுதேவன் குழுவினர் நாதசுரம்
5-30 துவக்கம்; தமிழக ஆளுநர் மேதகு S L. குரானா
6-30 குமாரி சாந்தினி கோபால் (K. J. சரசா மாணவி) பரதநாட்டியம்

**18—12—82**

பகல் 2-00 ரஞ்சனி சுவாமிநாதன் குழுவினர் பாட்டு
3-45 S ரவீந்தரன் குழுவினர் வீணை
மாலை 6-00 செம்மங்குடி R. சீனிவாசய்யர் குழுவினர் பாட்டு
இரவு 9-00 S. ராஜம் குழுவினர் பாட்டு

**19—12—82**

பகல் 2-00 குமாரி M K. ஜெயந்தி குழுவினர் பாட்டு
3-45 பத்மா நாராயணசாமி குழுவினர் பாட்டு
மாலை 6-00 குமாரி பத்மா சுப்ரமணியம் பரத நாட்டியம்
இரவு 9-00 T. R. சுப்பரமணியம் குழுவினர் பாட்டு

**20—12—82**

பகல் 2-00 V இராமனுஜன் குழுவினர் பாட்டு
3-45 R. ரமணி குழுவினர் வீணை
மாலை 6-00 ராதா ஜெயலட்சுமி குழுவினர் பாட்டு
இரவு 9-00 குமாரி காயத்ரி நாராயணன் S. V. மாதவன் குழுவினர் வீணை

**21—12—82**

பகல் 2-00 S. சீனிவாசன் குழுவினர் வீணை
3-45 குமாரி பிரமிளா குழுவினர் பாட்டு
மாலை 6-00 ஸ்ரீரங்கம் கோபால ரத்தினம் குழுவினர் பாட்டு
இரவு 9-00 கோமளா வரதன் பரத நாட்டியம்

**22—12—82**

பகல் 2-00 S. ராஜா குழுவினர் புல்லாங்குழல்
3-45 சீர்காழி M. இராமசாமி பிள்ளை குழுவினர் பாட்டு
மாலை 6-00 பாலக்காடு K. V நாராயணசாமி குழுவினர் பாட்டு
இரவு 9-00 குமாரிகள் ஜெயஸ்ரீ. விஜயஸ்ரீ பரத நாட்டியம் (அடையாறு லட்சுமணன் மாணவிகள்)

**23—12—82**

பகல் 2-00 கற்பகம் ரமணி குழுவினர் பாட்டு
3-45 சுதா ரகுநாதன் குழுவினர் பாட்டு
மாலை 6-00 டாக்டர் S. ராமனுஜன் குழுவினர் பாட்டு
இரவு 9-00 உஷா சீனுவாசன் பரதநாட்டியம் (உமா தண்டாயுத பாணிபிள்ளை மாணவி)

**24—12—82**

பகல் 2-00 கமலா சுதர்சனம் குழுவினர் பாட்டு
3-45 சோபனா ரங்காச்சாரி குழுவினர் பாட்டு
மாலை 6-00 டாக்டர் N. ரமணி குழுவினர் புல்லாங்குழல்
இரவு 9-00 D. பசுபதி குழுவினர் பாட்டு

**25—12—82**

பகல் 2-00 திருக்கருகாவூர் G. சீனிவாச ராகவன் குழுவினர் பாட்டு
3-45 மரகதம் ராமசாமி குழுவினர் பாட்டு
மாலை 6-00 K. J. ஜேசுதாஸ் குழுவினர் பாட்டு
இரவு 9-00 S. ராஜேஸ்வரி குழுவினர் பாட்டு

**26—12—82**

பகல் 2-00 நெய்வேலி R. சந்தானகோபால் குழுவினர் பாட்டு
3-45 "ஸ்கந்த குமாரம்" இசை நிகழ்ச்சி ஜெயா சீத்தாராமன் குழுவினர்
மாலை 6-00 நேதனூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர் பாட்டு
இரவு 9-00 தமிழ் நாடகம்

**27—12—82**

பகல் 2-00 K. விஜயா குழுவினர் பாட்டு
3-45 குமாரி உஷா அனந்தகோபாலன் குழுவினர் பிடில்
மாலை 6-00 மகாராஜபுரம் V. சந்தானம் குழுவினர் பாட்டு
இரவு 9-00 நியூடெல்லி மனோதாஸ் ஒரிசா நடனம்

**28—12—82**

பகல் 2-00 R. விஜயலட்சுமி R. சித்ரா குழுவினர் பாட்டு
3-45 அருணா சாயிராம் குழுவினர் பாட்டு
மாலை 6-00 மதுரை சோமசுந்தரம் குழுவினர் பாட்டு
இரவு 9-00 அடையாறு G. வாசுதேவன் நாதசுரம்

**29—12—82**

பகல் 2-00 குமாரி G. சியாமளா குழுவினர் வீணை
3-45 மாஸ்டர் சீனிவாசன் குழுவினர் மாண்டலின்
மாலை 6-00 குன்னக்குடி வைத்தியநாதன் பிடில்
வலையபட்டி சுப்பிரமணியம் தவில்
இரவு 9-00 தஞ்சாவூர் K. P. சிவானந்தம் சாரதா சிவானந்தம் வீணை

**30—12—82**

இரவு 8-00 D. K. ஜெயராமன் குழுவினர் பாட்டு

**31—12—82**

பகல் 2-00 குமாரி N. C ராஜலட்சுமி குழுவினர் பாட்டு
3-45 போலோகம் A. K. சாம்பசிவம குழுவினர் பாட்டு
மாலை 6-00 V. P. தனஞ்செயன & சாந்தா தனஞ்செயன் பரத நாட்டியம்
இரவு 9-00 வாணி ஜெயராம் குழுவினர் இந்துஸ்தானி இசை

**1—1—83**

மாலை 6-00 "யமதர்மன்" தமிழ் நாடகம்
இரவு 9-00 ஸ்ரீமதி பிரம்மானந்தம் குமாரி அனுராதாபிரம்மானந்தம் வயலின்

**2—1—83**

மாலை 6-00 S. பாலசந்தர் & காயத்ரி நாராயணன் வீணை

---

# ஆடலரசி அபிராமி

முன்னுரை —கலைத்தொடர்கதை

இயலிசை இதழ் மற்ற பத்திரிக்கைகளில் இருந்து மாறுபட்டது. இதில் வெளிவரும் இக்கதையும் மற்ற இதழ்களில் வரும் தொடர்கதையிலிருந்து மாறுபட்டது. இது ஒரு கலைத் தொடர்கதை. கதை கொஞ்சம் தான் இருக்கும். கலை சம்பந்தப்பட்ட கருத்துக்கள் அதிகம் இருக்கும்.

இந்த 'ஆடலரசி அபிராமி, கதை இன்றைக்கு விட்டத்தட்ட 75 ஆண்டுகளுக்கு முன்னர் மிருதத்தல் குறிப்பாக தஞ்சை மாவட்டத்தில் சிலகலைக் குடும்பங்களில் நிகழ்ந்தாக எழுதப்படும் கதை. இதில் பல உண்மைச் சம்பவங்களும் வரலாம். அதில் சம்பந்தப்பட்ட அனை வரும் இன்று உயிருடன் இல்லை என்றாலும் புனைப் பெயர்களே வழங்கப்படும் அவர்களது புகழுக்கும் எவ்வித மாசு கற்பிக்கப்படாது.

இதில் இசைக்கலை' நடனக் கலைப்பற்றி பல அபிப்ராயங்கள் விளக்கங்கள் கதைப்பாத்திரங்களை வாயிலாக வரும். அதில் சில புரட்சிகரமாகவும்தற்போது உள்ள நடைமுறைக்கு மாறுபட்டதாகவும் இருக்லாம். அப்படிப்பட்ட கருத்துக்கள் அனைத்தும் அக்கால கலைஞர்கள், ரசிகர்கள் அபிப்ராயங்களே அதற்கு தக்க ஆதாரங்கள் உள்ளன எனினும் இக்கதையில் வரும் சம்பவங்கள் அபிப்ராயங்கள் குறித்து கலைஞர்கள், ரசிகர்கள் கடிதங்கள் எழுதினால் அதனை ஆராய்ந்து தகக பதில்களுடன் அல்லது திருத்தங்களுடன் அடுத்த இதழில் வெளியிடுவோம். ஆடலரசி அபிராமி கதையினை முடிந்ததும் முழுபுத்தகமாக வெளியிட இன்றே சில பிரசுரங்கள் முன வந்துள்ளன. அவ்வாறு புத்தகமாக வெளிவரும் பொழுது சிருத்தங்களுடன் வெளியிடலாம.

இக்கதையில் தனிப்பட்ட எவரையோ கலைப்பரம்பரையையோ, இனத்தையோ குறைத்து எழுதவேண்டும்

—தொடர்ச்சி 7ம் பக்கம்



## Dr. N. ரமணி புல்லாங்குழல் கலைஞர்



டாக்டர் ரமணியவர்கள் 1934ம் ஆண்டு திருவாரூரில் பிறந்தவர் சிறு வயது முதல தனது பாட்டனார் ஆழியூர் நாராயணசாமி அய்யரிடம் புல்லாங்குழல் வாசிக்கக்கற்று சிக்கல் சிங்கார வேலர் சன்னதியில் 8 வயதிலேயே அரங்கு ஏறியவர். பின்னர் புல்லாங்குழல் மேதை TR மகாலிங்கம் அவர்களிடம் 10 வருடகாலம் பயிற்சி பெற்றார்.

சென்னை இசையரங்குகளில் வாய்ப்புகள் பெற்றார் வீணை S. பாலச்சந்தர், லால்குடி ஜெயராமன், பாலக்காடு மணி அய்யர் போன்ற வித்வான்களால் இசை உலகுக்கு நன்கு அறிமுகமானார். வானொலியிலும், இசைத் தட்டுகளிலும் வாசிததார்.

வெளிநாடுகள் பலமுறை சென்று குழலிசை வழங்கியவர். அமெரிக்காவிற்கு மூன்றுமுறை சென்றுள்ளார். அங்குதான டாக்டர் பட்டம் பெற்றார். வட இந்திய கலைஞர் ஒருவருடன் உட்கார்ந்து முதன் முதலில் 'ஜுகல்பந்தி' என்று இசை நிகழ்ச்சியினை நடத்தியவர். இந்துஸ்தானி இசை, கர்நாடக இசை இரண்டுக்கும் பொதுவான ராகங்களை எடுத்து இந்துஸ்தானி கலைஞர்களுடன் அமர்ந்து இசை வழங்குவதற்கு 'ஜுகல்பந்தி' என்கின்றனர். தவிர வடநாட்டு கலைஞர்கள் வாசிப்பது போன்று பெரிய புல்லாங்குழலை வைத்து கர்நாடக இசைக்கச்சேரி செய்தவர்.

தமிழக அரசில் 'கலைமாமணி' பட்டம பெற்று இன்று தமிழக அரசின் அரசவைக் கலைஞராகவும் இருக்கின்றார். இவரிடம பல மாணவர்களும் இசைக் கற்று வருகின்றனர் மிகவும் எளிமையாக அன்பாக அனைவரிடமும், பழகக் கூடியவர். இவரது மகள் R. தியாகராசன அவர்களும் புல்லாங்குழல் வாசிக்கின்றார்.

இவ்வாண்டு 'முத்தமிழ்ப் பேரவைக் கலை விழாவில் 'இசைச் செல்வம்' விருதும் பெறுகின்றார்.

## அரித்துவாரமங்கலம A. K. பழநிவேல் தவில் கலைஞர்





தஞ்சை மாவட்டம் அரித்துவாரமங்கலத்தில் தவில் வித்வான் S. குமரவேல் பிள்ளையவர்களுக்கும் சேதுக்கண்ணு அம்மாள் அவர்களுக்கும் பிறந்தவர் அரித்துவாரமங்கலம் A K. பழநிவேல் சிறவயது முதல் தனது தந்தையாரிடமும் அதன்பின் 'கலைமாமணி' திருச்சேறை T.G முத்துகுமாரசாமி பிள்ளையவர்களிடமும் தவில் வாசிக்க பயின்றார். இஞ்சிக்குடி E. K. பிச்சைக்கண்ணு பிள்ளை, திருச்சேறை T. V. S. சிவசுப்ரமணிய பிள்ளை மதுரை M. P. N. சகோதரர்கள் மன்னார்குடி M. S. பரமசிவம் முதலிய நாதஸ்வர கலைஞர்கள் குழுவில் வாசிதது பிரபலமானார் பழம்பெரும கலைஞர்களான திருவெண்காடு சுப்ரமணிய பிள்ளை திருவிடைமருதூர் வீராசாமி பிள்ளை, சூளிக்கரை பிச்சையப்பா பிள்ளை, இவர்களுக்கும் வாசித்துள்ளார், ரசிகர்கள் இவரை மறைந்த தவில் மேதை நீடாமங்கலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வாரிசு என பாராட்டினார்கள்.

பின்னர் தனித்தவில் கலைஞராக வளர்ந்தார். கடந்து 18 ஆண்டு காலமாக தவில் வாசித்து வருகின்றார், தமிழக அரசு 'கலைமாமணி' பட்டம் கொடுத்து இவரைச்சிறப்பிததது பலமுறை வெளிநாடுகள் சென்று வாசித்துள்ளார். அமெரிக்கா கனடாவில் சில மாதங்கள் தங்கி வாசித்துள்ளார். ஏராள பட்டங்கள் தங்க பதக்கங்கள் பெற்றுள்ளார். தற்பொழுது தமிழக அரசவை இளங் கலைஞராகவும் இருக்கின்றார், இவரது மனைவியார் பெயர் நாகலட்சுமி தனது மகனுக்கும் தவில் கற்றுக் கொடுக்கின்றார். இவர் இவ்வாண்டு முத்தமிழ்ப் பேரவைக் கலைவிழாவில் 'லயச் செல்வம் வருது பெறுகின்றார்.

## உமையாள்புரம் சிவராமனுக்கு வெள்ளி விருது
## லண்டன் இந்தியக் கலைவிழா முடிவு

லண்டனில் பல மாதங்களாக நடைபெற்ற இந்தியக் கலை விழா கடந்த 14-11-82 அன்று முடிவுற்றது. இதில் சிறப்பு நிகழ்ச்சி நடத்த தமிழக மிருதங்கக் கலைஞர் உமையாள புரம் சிவராமன், கடம் T. H. விநாயகராம் இவர்கள் சென்று தாள வாத்தியக் கச்சேரி செய்தார், அயல்நாட்டு ரசிகர்கள் மிகவும் ரசித்தனர். திரு சிவராமனை அவர்களைப் பாராட்டி ராணி எலிசபெத் உருவம் பொறித்த வெள்ளி விருந்தினை வழங்கினர். தென்னிந்திய லயக் கலைஞர் ஒருவர் நமது அரசின் சார்பில சென்று இத்தனை பெரிய விருது பெறுவது குறித்து இசையுலகம் மகிழ்கின்றது. நமது வாழ்த்துக்கள்.

## திருவையாற்றில் தமிழிசை விழா

திருவையாற்றில் தமிழிசை மன்றம் தனது 12வது ஆண்டு விழாவினை வரும் 83ம் ஆண்டு ஜனவரி 14, 15, 16 தேதிகளில் திருவையாறு அரசினர் கல்லூரித் திடலில் நடத்த உள்ளது. வழக்கப்படி சில அமைச்சர்கள் சட்டசபை உறுப்பினர்கள், தலைவர்களை அழைக்க உள்ளனர், பல புகழ்மிக்க இசைவாணர்கள் பைந்தமிழிசை வழங்க உள்ளனர். நாதசுர தவில் கலைஞர்கள் வாசிக்க உள்ளனர். இவ்வையரங்கத்திற்கு மறைந்த முன்னாள் மன்ற செயலர் இசைவாணர் காட்டூர் T. இராஜசேகரன் பெயரினையும் விழாப் பந்தலுக்கு புலவர் சா. சுபாசந்திரன் பெயரினையும் சூட்டுகின்றனர் நாதசுர கலைஞர் ஒருவர் சிறப்பு தவில் கலைஞர் ஒருவர் இன்னிசைக் கலைஞர் ஒருவர் ஆகிய மூவருக்கு பட்டங்கள் வழங்கி பொன்னாடைப் போர்த்துவர், விழா ஏற்பாடுகளை செயலர்கள், பெரமூர் ப. சீனிவாசன், பொருளாளர் தி. குமாரசாமி, இரா. பஞ்சநதம் தங்க. கலியமூர்த்தி மற்றும் பலர் செய்து வருகின்றனர். இவ்வாண்டு, திருவையாறு தியாகராஜ உற்சவ இசைவிழா 29-1-83 முதல் 2-2-83 வரை நடக்க இருப்பது அறிந்ததே.

## வீணை சிட்டிபாபுவுக்கு பட்டம்
## விசாகபட்டினம் சங்கீத அகடமி வழங்கியது

கர்நாடக சங்கீதத்தில் சிறப்பான சேவை செய்ததற்காக பிரபல வீணைக்கலைஞர் சிட்டி பாபுவுக்கு 'சங்கீத கலாசாகர' என்ற பட்டம் விசாகபட்டினம் சங்கீத அகடமி சார்பில் வழங்கப்பட்டு இருக்கிறது.

இவர் தற்பொழுது திருப்பதி திருமலை தேவஸ்தான ஆஸ்தான வீணைக்கலைஞராகவும், தமிழக அரசவைக்கலைஞராகவும் இருந்து வருகின்றார், ஏராள வீணைக்கச்சேரிகள் செய்துள்ளார். நிறைய இசைத்தட்டுகளில் வீணை வாசித்துள்ளார்.



## மியூசிக் அகடமி இசைவிழா 1982
### தலைவர்
## 'சங்கீத கலாநிதி'
### எம்பார்
## S. விஜயராகவாச்சாரியார்

—ஹரிகதைக் கலைஞர்



எம்பார் S. விஜயராகவாச்சாரியார் 1909ம் ஆண்டு எம்பார் ஸ்ரீ ரங்காச்சாரியார் அவர்களுக்கு சிதம்பரத்தில் பிறந்தார். இவரது பாட்டனார் எம்பார் வரதாச்சாரியார் சிறந்த பாண்டித்யத்துடன், நல்ல சாரீர சம்பத்துடன வாக்கேயக்காரர்கள், தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் கீர்த்தனைகளில் தேர்ச்சி பெற்று விளங்கயவர். இவரை 'இராமாயண அய்யங்கார்' என்று சிறப்புப் பெயருடன் அழைத்தனர். இவரது தந்தையார் ஸ்ரீ ரங்காச்சாரி அவர்களும் ஹரிகதை வித்வானாக சிறந்து விளங்கியவர்.

தனது பாட்டனாரிடமும், தந்தையாரிடமும் எம்பார் நிறையப் படித்தார். தன்னுடைய 21 வயது வரை பாட்டனார் அரவணைப்பில் வளர்ந்தவர். மெட்ரிகுலேசன் வரை படித்தார். அதன் பிறகு மீனாட்சி கல்லூரியில் மஹோ மஹோபாத்யாய ஸ்ரீ தண்டபாணி தீக்ஷிதர் மாணவனாக இருந்தவர். இவர் 'வேதாந்த சிரோமணி' 'ஸாகித்ய சிரோமணி' இரண்டையும் பெற்று இரட்டை சிரோமணி ஆனார். வடமொழிக் கல்வியுடன் தமிழ் இலக்கண இலக்கியப் புலமையும் நன்கு கற்றவர். சீர்காழியில் சிலகாலம் ஒரு பள்ளியில் சமஸ்கிருத ஆசிரியராகப் பயின்ற எம்பார் அவர்கள் தன்னுடைய தந்தையாரிடம் ஹரிகதையைப் பயின்றார்கள். ஹரிகதையின் தாய்மொழியான மராட்டியம் மற்றும் தெலுங்கு, ஹிந்தி போன்ற மொழிகளையும் பயின்றார்.

கடந்த 47 ஆண்டுகளாக ஹரிகதா உலகில் பெரிய புகழுடன் இருந்து வருகிறார். தமிழ் நாட்டில் இவர்கள் கால்படாத ஊரே இல்லை என்று சொல்லலாம். பாரதத்தின் பல பாகங்களுக்கும் சென்று ஏராளமாக கதைகள் நிகழ்த்தி வந்து கொண்டு இருக்கிறார்கள் மூன்று முறை மலேஷியா, சிங்கப்பூர், சென்று சமயப் பிரச்சாரம் செய்து வந்து இருக்கிறார்கள்.

நிறைய திருப்பணி கைங்கரியங்கள் செய்து கொடுத்து பல கோயில்களுக்கு நிதி திரட்டிக் கொடுத்து இருக்கிறார். திருவாரூர் தேர் திருப்பணி, கமலாலயம் (குளம்) திருப்பணி போன்றவைகளுக்கு நிறைய நிதி திரட்டிக் கொடுத்த பெருமை இவரை சாரும். குடந்தை சக்ரபாணி ஸ்வாமி கோயில் திருப்பணிக்கும், ஹரிகதைகள் நிகழ்த்தி அதன் மூலம் கிடைத்த பொருள்களை வழங்கி இருக்கிறார்.

எம்பார் அவர்களுக்கு பல பட்டங்கள் இருக்கின்றன. காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் "கீர்த்தன குல சேகர", தியாக மணி ஆகிய இரு விருதுகளையும் வழங்கியுள்ளார்கள். மேலும் "கதா ரஸஸ்வாதக" "கீதகதாப் பிரவீண" "சங்கீத சாகித்ய வல்லப," "கலைமாமணி" "ஹரி கதா சக்ரவர்த்தி" "சங்கீத கலா சிகாமணி," "மதுரகலாப்பிரவீண," "Fellow of Sangit Nataka Academy New Delhi "ஹரிகதாரத்னாகர"...... "இதிஹாச புராண சாஸ்த்ரக்ஞ" போன்ற பல பட்டங்கள் இவருக்கு உண்டு.

இவருக்கு 3 புதல்வர்களும் 4 புதல்விகளும் இருக்கின்றனர் தற்போது ஸ்ரீரங்கத்தில் வசித்து வருகின்றார்.

## கந்தனருட்சங்கம் முதலாண்டு விழா



சென்னை அமைந்தகரையிலுள்ள கந்தன் அருட்சங்க முதலாண்டு நிறைவு விழா திருத்தணியில மலைப்படி வழியிலுள்ள ஆலடி சுப்பராய செட்டி சத்திரத்தில் 31-12-82 அன்று நடைபெற உள்ளது. அன்று மதியம் அன்னதானமும் மாலை முதல் 1-1-83 காலை வரை தொடர் இசை நிகழ்ச்சிகளும் நடைபெறும். சங்கத் தலைவர் T. S. மோகனரங்கம் தலைமை வகிப்பார். காஞ்சிபுரம் விநாயக முதலியார் பவானி அம்மையார், சிதம்பரம் S மீனாட்சி சுந்தரம், B. J மாதவன், பத்மாவதி மற்றும் பலர் பாடுகின்றனர். இச்சங்கம் திருப்போரூரில் சித்திரைக் கிருத்திகை விழாவினை இவ்வாண்டும் சிறப்பாக கொண்டாட உள்ளது.

இயலிசை



## 'ஊரும் உறவும்'

### தரலாம் பேரும் புகழும்



தீபாவளிக்கு வந்த நல்ல படங்களில் ஒன்று ஊரும் உறவும்; கொஞ்சம் மாறுபட்ட கதை முக்கப்போல் சிவாஜிக்கு நடிக்க நல்ல வாய்ப்பு. துணைக்கு K R விஜயா இவர்களுடன் நிழல்கள் போல் நடிக்கும் ரவி ரஞ்சனி ஜோடி - இளசுகளுக்கு நிறைவு கொடுக்கலாம். Y G மகேந்திராவின் கமுக்கமான பசக்காயடி தேங்கா தேங்கா தான்.

தயாரிப்பாளர் புஷ்பா A.V.M. ராஜன் தாராளமாக செலவழித்து நல்ல இடங்களில் தரமான படபிடிப்பு செய்துள்ளார். இயக்குநர் நடிகர் மேஜர் நாடகத்திலிருந்து வந்த கதையாதலால் அவருக்கு வேலை குறைவு. பாடல்கள் சங்கர் கணேஷ் T.M.S. பாடிய இரண்டு பாடல்களும் பளிச்சென பழையபட பாடல்கள் போல் ஒலிக்கின்றது [illegible] காதல் பாட்டு காதில் ஒலிக்கின்றது படத்திலுள்ள புதுமை சிலக் கூமிதாவை பயன்படுத்தாதது அதற்கு கட்டாயம் அவர்களை வாழ்த்த வேண்டும். யானையெல்லாம் வருவதால் குடும்பத்துடன் சென்று அழகாகப் பார்த்து நிறைவாக வெளிவரலாம்.

## கந்தர் சஷ்டி கலைவிழாக்கள்

தமிழக மெங்கும் கந்த சஷ்டி திருவிழா 15-11-82 முதல் 21-11-82 வரை நடைப்பெற்றது பல இடங்களில் கலை நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்திருந்தனர் சென்னையில் வடபழநியாண்டவர் ஆலயம் கந்தகோட்டம், தேனுமபேட்டை அருள்மிகு சுப்ரமணியசாமி திருக்கோவில் விழாக்களில் பல பிரபல இசைவாணர்கள் கலந்துநிகழ்ச்சிகள் நடத்தினர் தி. நகர் கிருஷ்ணகான சபையில் சஷ்டி சீரிஸ் என்று ஏழு இளநிலை கலைஞர்களுக்கு வாய்ப்புகள் தந்தனர்.

திருவாரூர் அருகே உள்ள சிக்கல் அருள்மிகு நவநீத ஈஸ்வரர் சிங்காரவேலன் ஆலய கந்த சஷ்டி உற்சவங்களில் குடந்தை வி-பி இராஜேஸ்வரி பாமா கண்ணன் ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

திருச்சி மாவட்டம் துறையூர் அருள்மிகு அங்காளபரமேஸ்வரி ஆலய முருகன் சன்னதியில் நடைபெற்ற சஷ்டி விழாவில் சாது பித்துகுளி முருகதாஸ் தேவி சரோஜா முருகதாஸ் குழுவினர் பக்திப பாடல்கள் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

திருச்சி மாவட்டம் குமாரவயலூர் முருகன் கோவில கந்த சஷ்டி விழாவில் திருமதி M R விஜயா குழுவினர் இன்னிசை வழங்கினர். விழாவில் விஜயா அவர்களுக்கு பாராட்டும் தெரிவிக்கப்பட்டு பரிசுகள வழங்கினர்.

திருவாரூர் — தஞ்சை சாலை சோழ பத்தர் இல்லத்தில் கொண்டாடப்பட்ட சஷ்டி விழாவில் ஆடுர் சங்கர், கீழனூர் குருராமலிங்கம் மாப்பிள்ளை குப்பம் உத்திராபதி இனியன் ஆகியோர் இன்னிசை கச்சேரிகள் நடந்தன.

தேவக் கோட்டையில் வழக்கப்படி சிறப்பாக கந்தர் சஷ்டி விழாக்கழகம் பல கலை நிகழ்ச்சிகளை நடத்தியது.

தகவல் : திருவாரூர் கல்பனா

## 'கலைமாமணி' விருது வழங்குவதில் முரண்பாடுகள்

### இசை வேளாளர் சங்கம் முறையீடு

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தலைவர் உயர்நீதி மன்ற நடுவர் P. R. கோகுல கிருஷ்ணன் அவர்களுக்கு சென்னை மாவட்ட இசை வேளாளர் சங்கம் ஓர் விரிவான கடிதம் அனுப்பியுள்ளது. அதில் வருடா வருடம் இயல் இசை நாடக மன்றம் வழங்கும் கலைமாமணி' விருதுகள் வறுமையில் வாடும் கலைஞர்களுக்கு உதவி மான்யம் இவற்றிறகு கலைஞர்களைத் தேர்ந்தெடுப்பதில் சரியான முறைகள் பின்பற்றபடவில்லை என சுட்டி காட்டியுள்ளது. பெரும்பாலும் சிபாரிசு அடிப்படையிலேயே இவைகள் வழங்கப்படுவதை சங்கம் எடுத்துக்காட்டி அதனை மாற்ற வேண்டிக்கொண்டுள்ளது. மற்றும் தகுதியும் புகழும் உள்ள பல கலைஞர்கள் இயல் இசை நாடக மன்றத்தால் புறக்கணிக்கப்படுவதையும் தெரிவித்து அவ்வாறுன பல கலைஞர்களின் பட்டியலையும் தந்துள்ளது. கடிதம் இயல் இசை நாடக மன்றம் பரிசீலனையில் உள்ளது எனத் தெரிகின்றது.

மதுரை M. P. N. சேதுராமன் M. P. N. பொன்னுசாமி



## நாதசுரக்கலைஞர்கள்

முத்தமிழும் சிறந்து விளங்கிய மதுரை மாநகரில் சென்ற நூற்றுண்டில் மதுரை M. K. M. பொன்னுசாமி பிள்ளை என்ற நாதசுர மேதை வாழ்ந்தார். அவர் 'பூர்வீக சங்கீத உண்மை' என்ற இசை நூலை எழுதி இசை உலகுக்கு பெரும் பணியாற்றியவர். நமது தமிழிசை ஆராய்ச்சிக்கு இன்று இது ஒரு திறவுகோலாக இருக்கின்றது. இந்நூல் பற்றி இயலிசையில பின்னா தனிக் கட்டுரை வெளிவர உள்ளது.

இவரது மகனுர் M.P. நடேசப் பிள்ளையவர்களும் மதுரையில் நாதசுரக் கலைஞராக விளங்கியவர், இவருக்கும், திருமதி சம்பூர்ணத்தம்மாள் அவர்களுக்கும் 1928ல் M. P. N. சேதுராமன் அவர்களும், 1933ல் M P. N. பொன்னுசாமி அவர்களும் பிறந்தார்கள். இருவருமே தந்தையாரிடம் சிறு வயது முதல் நாதசுரம் வாசிக்கக் கற்றுக் கொண்டனர். மதுரை சகோதரர்கள் என்று நாதசுரக் கச்சேரிகளுக்கு சென்று பிரபலமானுர்கள். வானெலியிலும் வாசித்தனர்.

1968ல் திருவருட்செல்வர் A. P. நாகராசன் அவர்கள் தயாரித்த 'தில்லானுமோகனும்பாள்' என்ற திரைப்படத்தில் சிவாஜி கணேசன் நாதசுரக் கலைஞராக நடிக்க அவருககு நாதசுரம் வாசிக்கும் வாய்ப்பு இவர்களுக்கு வழங்கினர். திரைப்படம் வெற்றிகரமாக ஓடி இவர்களுக்கு பெரும் புகழ் கொடுத்தது.

இந்தியா எங்கும் சென்று நிகழ்ச்சிகள் நடத்தினர், ஏராள தனி இசைத்தட்டுகள் வெளிவந்தன. இலங்கைக்கு பல முறை சென்று வந்தனர், 1978ல் இரண்டு மாதங்கள் சிங்கப்பூர், மலேசியா நாடுகள் சென்று ஏராள நிகழ்ச்சிகள் நடத்தி அந்த நாட்டு மக்கள் ஆதரவினைப் பெற்றனர். அங்குள்ள வள்ளல் திருப்பத்தூர் திரு ஆறுமுகம் பிள்ளையவர்களுடைய அன்பினைப்பெற்று அவரது குடும்ப கலைஞராக இன்றும் இருந்து வருகினறனர், தமிழக அரசின் 'கலைமாமணி' பட்டம் பெற்றனர். இன்னும் ஏராள பட்டங்களும் பெற்றுள்ளனர். கடந்த 11 ஆண்டுகளாக திருவாவடுதுறை ஆதினக் கலைஞர்களாக இருந்து வருகின்றனர். மற்றும் பல ஆதின மகா சந்நிதானங்களிடம் தங்கப்பதக்கம், தங்கமாலைகள், பரிசுகள் பெற்றுள்ளனர். தற்பொழுது மதுரை அருள்மிகு மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலய சிறப்பு கலைஞர்களாகவும் தமிழக அரசவைக் கலைஞர்களாகவும் இருநது வருகினறனர்.

இவ்வாண்டு முத்தமிழ்ப் பேரவைக்கலை விழாவில் 'நாதசுர செல்வம்' விருது பெற உள்ளனர்.

## 'எழிலிசை மன்னர்'

### M. K. தியாகராச பாகவதர் பெயரில் தமிழ் இசைக்கல்லூரி

### விசுவகர்ம ஜனநாயக முன்னணி வேண்டுகோள்

திருச்சியில் விசுவகர்ம ஜனநாயக முன்னணியின் அகில இந்திய கூட்டமும் மறைநத MK. தியாகராச பாகவதர் 23வது நினைவுநாள் விழாவும் A. K. வேலாயுதம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருச்சி சிந்தாமணி பஸ் நிலையம் அருகில் தியாகராச பாகவதர் சிலையை அமைக்க கூட்டத்தில் முடிவு செய்தனர். தவிர கீழ்க்கண்ட தீர்மானங்களும் நிறைவேற்றினர்,

(1) திருச்சி கலையரங்கத்திற்கு M. K. தியாகராச பாகவதர் கலையரங்கம் என பெயர் சூட்டி அவரது குடும்பத்திற்கு ரூ 125000/- உதவித்தொகை வழங்கிய தமிழக அரசுக்கு நன்றி தெரிவிததனர்.

(2) அவரது நினைவு நாளை ஆண்டுதோறும் அரசு கொண்டாட வேண்டும். அவர் வாழ்நத வீட்டினை அரசு வாங்கி தமிழ் இசைக்கல்லூரி அமைக்க வேண்டும் என்று கோரிக்கைகளை அரசுக்கு அனுப்பினர்.

திருச்சியில் இசைக்கல்லூரி கிடையாது. எனவே அரசனர் இதனை ஏற்றுக்கொள்ளலாம் எனத் தெரிகிறது.



## ஸ்ரீரங்கத்திற்கு இளையராசா நன்கொடை

திருச்சியில் உள்ள ஸ்ரீரங்கம் திருவரங்கநாதர் கோவிலில் 226 அடி உயர ராசகோபுரம் கட்டும் திருப்பணி நடைபெற்று வருகின்றது. இதன் ஆருவது அடுக்கினை கட்டித்தர இசையமைப்பாளர் இளையராஜா பொறுப்பு ஏற்றுள்ளார். இதற்கு 7 லட்சம் செலவு ஆகும் என்று தெரிகின்றது. முதல் தவணையாக ரூ. 1 லட்சத்தை சமீபத்தில் ஸ்ரீரங்கத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் இந்து அறநிலையத்துறை அமைச்சர் R. M. வீரப்பன் அவர்களிடம் இளையராஜா அளித்தார். மிகுதி பணத்தை தமிழகத்தில் பல்வேறு இடங்களில் இசை நிகழ்ச்சி நடத்தி திரட்ட உள்ளார். முதல் நிகழ்ச்சி கோயம்புத்தூரில் நிகழ்த்துகின்றார். கோவில் திருப்பணிக்கு இதுவரை இவ்வளவு பெரிய தொகையை நன்கொடையாக ஒரு இசையமைப்பாளர் அளிப்பது வரலாறு காணாத நிகழ்ச்சியாகும். வளர்க அவர் தொண்டு

# மியூசிக் அகடமி

சென்னை

## 56 - வது ஆண்டு மாநாடும், கலைநிகழ்ச்சிகளும்



இடம் : T. T. கிருஷ்ணமாச்சாரி அரங்கம், T. T. K. சாலை, இராயப்பேட்டை

**19—12—82**

மாலை 4-00 இந்திய ராணுவ அமைச்சர் உயர்திரு. R. வெங்கட்ராமன் துவக்கிவைப்பார்
எம்பார் திரு. விஜயராகவாச்சாரியார் தலைமை வகிப்பார்
5-00 ஜெயந்தி ராசகோபால் பரதநாட்டியம்
இரவு 8-00 திருவிழா R. ஜெயசங்கர் நாதசுரம்
வலையபட்டி A. R. சுப்ரமணியம் தவில்
மன்னார்குடி ராசகோபால் தவில்

**20—12—82**

பகல் 12-30 நிர்மலா சுந்தரராசன் குழுவினர் பாட்டு
2-00 வைரமங்கலம் லட்சுமி நாராயணன் பாட்டு
மாலை 4-30 ராஜேஸ்வரி பத்மநாபன் குழுவினர் வீணை
7-30 நேதுனூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர் பாட்டு

**21—12—82**

பகல் 12-30 சுமதி நாராயணன் குழுவினர் பாட்டு
2-00 நாகமணி ஸ்ரீநாத் குழுவினர் பாட்டு
மாலை 4-30 B ராஜம் அய்யர் குழுவினர் பாட்டு
7-30 M. D. இராமநாதன் குழுவினர் பாட்டு

**22—12—82**

பகல் 12-30 T. V. சுந்தரவல்லி குழுவினர் பாட்டு
2-00 ரகு. ரவி குழுவினர் புல்லாங்குழல்
மாலை 4-30 மணி கிருஷ்ணசாமி குழுவினர் பாட்டு
7-30 D. K. ஜெயராமன் குழுவினர் பாட்டு

**23—12—82**

பகல் 12-30 O. S. தியாகராசன் குழுவினர் பாட்டு
2-00 சீதா சுப்ரமணியம் குழுவினர் பாட்டு
மாலை 4-30 N. ரமணி குழுவினர் புல்லாங்குழல்
7-30 T. M. தியாகராஜன் குழுவினர் பாட்டு

**24—12—82**

பகல் 12-30 P. M. கிருஷ்ணமாச்சாரி குழுவினர் பாட்டு
2-00 V. விஜயலட்சுமி குழுவினர் பாட்டு
மாலை 4-30 நெய்யாட்டிங்கரை வாசுதேவன் பாட்டு
7-30 மகாராஜபுரம் சந்தானம் குழுவினர் பாட்டு

**25—12—82**

பகல் 12-30 திருப்பணித்துரா லலிதா குழுவினர் பாட்டு
2-00 சாருமதி இராமச்சந்திரன் குழுவினர் பாட்டு
மாலை 4-30 மதுரை N. கிருஷ்ணன் குழுவினர் பாட்டு
7-30 M. L. வஸந்தகுமாரி குழுவினர் பாட்டு

**26—12—82**

பகல் 12-30 K. V. கிருஷ்ணா குழுவினர் வீணை
2-00 சுதா ரகுநாதன் குழுவினர் பாட்டு
மாலை 4-30 S. ராமநாதன் குழுவினர் பாட்டு
7-30 செம்மங்குடி சீனுவாச அய்யர் குழுவினர் பாட்டு

**27—12—82**

பகல் 12-30 V. விஜயலட்சுமி குழுவினர் பாட்டு
2-00 பாலை C. K. ராமச்சந்திரன் குழுவினர் பாட்டு
மாலை 4-30 சிக்கல் குஞ்சுமணி. நீலா குழுவினர் புல்லாங்குழல்
7-30 T. N. சேஷ கோபாலன் குழுவினர் பாட்டு

**28—12—82**

பகல் 12-30 தஞ்சநல்லூர் V. இராமநாதன் குழுவினர் பாட்டு
2-00 நிர்மலா பார்த்தசாரதி குழுவினர் வீணை
மாலை 4-30 R. வேதவல்லி குழுவினர் பாட்டு
7-30 D. K. பட்டம்மாள் குழுவினர் பாட்டு

**29—12—82**

பகல் 12-30 மாதங்கி குழுவினர் பாட்டு
2-00 அருணா சாயிராம் குழுவினர் பாட்டு
மாலை 4-30 V. இராமச்சந்திரன் குழுவினர் பாட்டு
7-30 K. V. நாராயணசாமி குழுவினர் பாட்டு

**30—12—82**

பகல் 12-30 ரீடா ராஜன் குழுவினர் பாட்டு
மாலை 7-30 அம்ஜத் அலிகான் குழுவினர் சரோட்

**31—12—82**

பகல் 12-30 R. சுந்தர் குழுவினர் பாட்டு
2-00 ரவிகிரன் குழுவினர் கோட்டு வாத்தியம்
மாலை 4-30 வோலேடி வெங்கடேசுவரலு குழுவினர் பாட்டு
7-30 பத்மா சுப்ரமணியம் பரதநாட்டியம்

**1—1—83**

மாலை 4-30 சதஸ் : இந்திய அரசு தகவல் ஒலிபரப்பு அமைச்சர் திரு. N. K. P. சால்வே தலைமை
இரவு 7-30 சுதாராணி ரகுபதி பரதநாட்டியம்

**2—1—83**

மாலை 4-30 R. S. மணி குழுவினர் பாட்டு
7-30 லட்சுமி விசுவநாதன் பரதநாட்டியம்

**3—1—83**

மாலை 6-30 சித்ரா விசுவேசுவரன் பரதநாட்டியம்

**4—1—83**

மாலை 6-30 மாளவிகா சருக்கை ஒரிசா நடனம்

---

—2-ம் பக்கத் தொடர்ச்சி

என்ற எண்ணம் ஆசிரியருக்குக் கிடையாது மற்ற விபரங்கள் கதை படிக்கும்போது அறிவீர்கள்.

### 1 கங்கையும் காவிரியும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் இந்திய திருநாடு முழுவதும் ஆடல், பாடல் கலைகள் பரவி இருந்தாலும் கங்கை காவிரி நதிகளின் கரைகளே கலைகளுக்கு தாயகமாக விளங்கியது- இரு அன்னைகளும் பயிர்களை வளர்த்து நாட்டிற்கு பசுமை சேர்த்துடன் கலைகளையும் வளர்த்து இனிமை சேர்த்தனர். வடக்கில் கங்கைத் தாய் முகலாயக் கலைகளின் அடிப்படையிலான இந்துஸ்தானி இசையையும் கதக் நடனத்தையும் வளர்த்தாள். தெற்கில் காவிரி அன்னை பண்டைத்தமிழ் கலைகளின் அடிப்படையிலான கர்நாடக இசையையும், பரதநாட்டியத்தையும் வளர்த்தாள் ஏராள கலைஞர்கள் இப்பகுதியில் பிறந்து வளர்ந்து கலைப்பணியாற்றினர். இந்த இரு நதி தீரத்திற்கும் கலைகள் அன்றும் இன்றும் என்றும் தொடர்பானவை.

இவ்வாறான காவிரி நதியின் கிளையான அரசலாற்றங்கரையில் கும்பகோணம் ஊரில் மாசி மாத காலை வேளையில் இரு அந்தணர்கள் குளித்துக் கொண்டு இருந்தனர். இருவரும் இளம் பிராயம் கடந்திருந்த போதும் வயது அதிகம் ஆகாதவர்கள், ஒருவர் பெயர் சுப்புணி என்கிற சுப்பிரமணி மேலக்காவிரியைச் சேர்ந்தவர். சமையல வேலை செய்து பிழைப்பவர், மற்றொருவர் குளத்து என்கிற குளத்துமணி. பூர்வீகம் பூந்தோட்டம் கிராமம் பிள்ளையார் கோவில் வேலை காரணமாக கும்பகோணம் வாசம்.

''என்னாங்காணும் சுப்புணி, தெரிமாய்யா சேதி. இன்னைக்கு கும்பேசுவர சுவாமி உற்சவத்தில் யாரோ புதுகுட்டி சதுராட வர்ராளாம், அவளைபத்தி பிரமாதமா சொல்றாங்க. இருந்தாலும் ஒரு ஆட்டக்காரிக்கு இவவளவு பெயர் கூடாது''

இவர்கள் காலத்தில் தமிழகத்தில் சினிமா கிடையாது. நாடகமும் கூத்து பாணியாக இருக்கும். ஒலிபெருக்கி வரவில்லை, சரியான மின்விளக்குகள் கிடையாது. பல கிராமங்களில் மின்சாரம் என்றால் என்ன என்றே தெரியாது. இன்று திரைப்பட நட்சத்திரங்களுக்கு இருக்கும் பேரும் புகழும் இசை நடனக் கலைஞர்களுக்குதான் அன்று உண்டு. மக்களுக்கும் முக்ய பொழுது போக்கு கோயில் குளம் திருவிழா, இசை நடன நிகழ்ச்சிகள் தான், கதா காலட்சேபங்களும் உண்டு.

குளத்து பேச்சைக் கேட்டு சுப்புணிக்கு சற்று கோபம் வந்தது; ''யோவ் குளத்து. அரைகுறையா சமாசாரங்களை தெரிந்து கொண்டு வந்து உளர்வதே உமது வேலை. அந்தக் காலத்தில் சின்ன மேளத்திலே பிரபல்யமா இருந்தாளே பந்தனை நல்லூர் பங்கஜம். அவளோட பொன்னுதாய்யா இன்னைக்கு கும்பேசுவரசாமி கோவிலுக்கு ஆடவரா, பெயர் அபிராமசுந்தரி.

அம்மன் சிலைக்கு அசைவு கொடுத்தா அபிராமிதான் என்று அவ ஆட்டத்தைப் பார்த்தவங்க சொல்றாங்க. எனக்கு இன்னைக்குதான் அவளைப் பார்க்கிற பாக்யம் கிடைச்சுது.

அந்தகாலத்தில் பரத நாட்டிய கச்சேரிக்கு சின்ன மேளக் கச்சேரி என்றும், நாதசுரக் கச்சேரிக்கு பெரிய மேளக்கச்சேரி என்றும் சொல்வார்கள். இது தவிர தேவார கோஷ்டி என திருமுறைப்பாடல்கள் பாடி ஓதுவாமூர்த்திகள் இறைவனுக்கு பின்னர் வருவார்கள். ஒலிபெருக்கி வராததால் வாய்ப்பாட்டு கச்சேரி தற்போது உள்ளது போல் பிரபலமாக இல்லை. எனினும் அரசர்கள் சிறு சபைகளில், பெரிய மனிதர்கள் வீட்டுக் கூடங்களில் வாய்ப்பாட்டுக்கச்சேரிகள் நடக்கும். தமிழ்ப்பாடல்கள் பாடமாட்டார்கள். கடைசியில் ஒன்றிரண்டு பாடினால் உண்டு.

—தொடர்ச்சி 8ம் பக்கம்

TN/MS/S)/260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T Thirunavukarasu at Jayalakshmi Art printers, Kaviarai Street, Vadapalani Madras 26 Published & Edited by M. Lakshmi, 57 South Sivan Koil Street, Kodambakkam, MADRAS 600 024.




ந. இராமநாதன்,
18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை - 28

# தமிழ் இசைச் சங்கம்

## இராஜா அண்ணாமலை மன்றம், சென்னை-1

## 40-வது ஆண்டு தமிழிசை விழா

**22—12—82**

| | |
|---|---|
| மாலை 5-30 | இந்திய அரசு விவசாய துணை அமைச்சர் திரு R. V சுவாமிநாதன் துவக்க சீர்காழி S கோவிந்தராசன் அவர்கள் தலைமை வகிப்பார் |
| 4-00 | மாயூரம் S R G S சகோதரர்கள் நாதசுரம் |
| இரவு 6-30 | சீர்காழி கோவிந்தராசன் குழுவினர் பாட்டு |
| 9-30 | திருவிழா R. ஜெயசங்கர், B A. நாதசுரம் |

**23—12—82**

| | |
|---|---|
| மாலை 3-30 | லால்குடி சுவாமிநாதன் குழுவினர் தேவாரம் |
| 6 00 | சுதாராணி ரகுபதி பரதநாட்டியம் |
| இரவு 9-30 | திருமுருக கிருபானந்தவாரியார் கதை அரங்கம் |

**24—12—82**

| | |
|---|---|
| மாலை 3-30 | நாலாயிர திவ்ய பிரபந்த இசையரங்கு |
| 4-30 | V. சோமசுந்தரம் குழுவினர் தேவாரம் |
| 6-00 | சேலம் ஜெயலட்சுமி குழுவினர் பாட்டு |
| இரவு 9-30 | குன்னக்குடி வைத்யநாதன் பிடில் வலையபட்டி சுப்ரமணியம் தவில் |

**2 —12—82**

| | |
|---|---|
| மாலை 3-30 | தருமபுரம் P. சுவாமிநாதன் குழுவினர் தேவாரம் |
| 6-00 | குமாரி B. சுவர்ணமுகி பரதநாட்டியம் |
| இரவு 9-30 | ஜானகி சுவாமிநாதன் குழுவினர் பாட்டு |

**26—12—82**

| | |
|---|---|
| மாலை 3-30 | [illegible] T. V. [illegible] சிகந்தரம் [illegible] முத்தையா தேவாரம் |
| 4-30 | [illegible] குழுவினர் திருப்புகழ் |
| 6-30 | [illegible] T. N. [illegible]கோபாலன் குழுவினர் பாட்டு |
| இரவு 9-30 | ஷேக் சின்ன மவுலானா நாதசுரம் வலங்கைமான் சண்முகசுந்தரம் தவில் |

**27—12—82**

| | |
|---|---|
| மாலை 4-00 | S P இராமு, S. P. இராதா குழுவினர் பாட்டு |
| 6-00 | K J ஜேசுதாஸ் குழுவினர் பாட்டு |
| இரவு 9-30 | Dr N ரமணி குழுவினர் புல்லாங்குழல் |

**28—12—82**

| | |
|---|---|
| மாலை 4-00 | ஜெயந்தி ராஜகோபால் பரதநாட்டியம் |
| 6-00 | சிட்டிபாபு குழுவினர் வீணை |
| இரவு 9-30 | மதுரை N கிருஷ்ணன் குழுவினர் பாட்டு |

**29—12—82**

| | |
|---|---|
| மாலை 4-00 | திருவிடைமருதூர் P. S. V ராஜா நாதசுரம் திருவெற்றியூர் பால சுந்தரம் தவில் |
| 6-00 | Dr. பத்மாசுப்ரமணியம் கம்ப இராமாயண நடனம் |
| இரவு 9-30 | கழுகுமலை A. கந்தசாமி குழுவினர் பாட்டு |

**30—12—82**

| | |
|---|---|
| மாலை 4-00 | நிர்மலா சுந்தரராசன் குழுவினர் பாட்டு |
| 6-30 | Dr. M. L. வஸந்தகுமாரி குழுவினர் பாட்டு |
| இரவு 9-30 | மாலா ரயிசிங்கானி பரத நாட்டியம் (வைஜயந்திமாலாபாலி நட்டுவாங்கம் |

**31—12—82**

| | |
|---|---|
| காலை 10-00 | புலவர் கீரன் கதையரங்கம் |
| மாலை 4-00 | ரேவதி ரத்னசாமி குழுவினர் பாட்டு |
| 6-00 | Dr. மதுரை S. சோமசுந்தரம் பாட்டு |
| இரவு 9-30 | M P. N. சேதுராமன், M P. N. பொன்னுசாமி குழுவினர் நாதசுரம் |

**1—1—83**

| | |
|---|---|
| காலை 10-00 | A R. சிகப்பி பரதநாட்டியம் (ஜெயலட்சுமி அருணாசலம் நட்டுவாங்கம் |
| மாலை 4-00 | ரகு ரவி குழுவினர் புல்லாங்குழல் |
| 6-00 | வைஜயந்திமாலாபாலி பரதநாட்டியம் |
| இரவு 9-30 | D K. ஜெயராமன் குழுவினர் பாட்டு |

**2—1—83**

| | |
|---|---|
| காலை 10-00 | ஜெயஸ்ரீ இராமானுஜம் பரத நாட்டியம் |
| மாலை 4-00 | குமாரி சைலஜா பரத நாட்டியம் |
| 6-00 | லால்குடி G. ஜெயராமன் G J R. கிருஷ்ணன் இருவயலின் |
| இரவு 9-30 | நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதசுரம் அரித்துவாரமங்கலம் பழநிவேல் தவில் திருவாளப்புத்தூர் கலியமூர்த்தி தவில் |

—7ம் பக்கத் தொடர்ச்சி

குளத்துக்குளத்தையும் துருவிப் பார்க்கும் சுபாவம். 'அப்படியா சேதி. பந்தநல்லூர் பங்கஜத்திற்கு அப்படி என்ன வயசு ஆயிடுச்சி அதற்குள்ள கண் சதுரை மூட்டை கட்டிகிட்டு திண்ணைக்குச் சிறுச ஊர்வலரா அனுப்புறாக குத்தாலம் பாப்பா வோட பங்கஜம் சின்னவதானே. அவ இன்னும் என்னமா ஆடறா. மிட்டா, மிராசு மைனர்கள் எல்லாம் அவ சதுருக்குதான் கூடராங்க.

சுப்புணிக்கு மேலும் கோபம் வந்தது. அவன் நல்ல கலை ரசிகன், கலைஞர் கலைக்கூறுவது அவனுக்கு தேவதூதர்களைப் பார்ப்பதுபோல் சுப்புணிமேலும் சினம் அடைந்து 'குளத்து நீ ஞானம் கெட்டவனய்யா குத்தாலம் பாப்பா சதுரா ஆடவரா கல்யாணம் பண்ண வருவா அதுக்குதான் மைனர்கள் சுற்றி வருவானுங்க, சதுர் கச்சேரிக்கு வர்ரவங்க குறிப்பிட்ட வயது வந்தவுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும் அதுதான் மரியாதை அதற்கு மேல் சோபிக்காது சரியா தொழில் செய்யமுடியாது அதுகுலதான பெரியவங்க சொல்வாங்க, இளமை போனவ ஆடுவதும், சாரீரம் போனவன் பாடுவதும் பிரயோஜனமில்லை என."

குளத்தை ஞானங்கெட்டவன் என்று சுப்புணி சொன்னது குளத்துக்கு பிடிக்கவில்லை, திருப்பி சுப்புணியை தாக்கு வதுடன் சுப்புணி மதிக்கும் நபர்களை தாக்க விரும்பினான்.

"குத்தாலம் பாப்பா ஆடர உடம்பைக் காப்பாத்திசிறாள். பங்கஜம் இந்த வயசுக்குள்ளேயே என்ன ஆட்டம் ஆடினாளோ அதற்குள்ள உட்கார்ந்திட்டா. அவ பொண்ணு என்ன ஆட்டம் ஆடப்போறாளோ எவனெல்லாம் பரம ரசிகன் ஆகிறானோ" என சதுர் ஆட்டத்தைப் பற்றி பேசாமல் வேறு திக்கில பேச்சை மாற்றினான்.

"சுப்புணி பந்தநல்லூர் பங்கஜம் சதுராடவந்தவதான். என்றாலும் அவளைப்பத்தி தப்பா யாரும் பேசி நான் கேட்டதில்லை. தனது வம்ச விருத்திக்கு யாரோ ஒரு பிரபுவை அண்டி வாழ்ந்தாள் என்பார்கள், அவளைப்பார்த்தா அம்பாளைப் பார்த்த மாதிரிதான் இருக்கும். அவ பொண்ணும் அடக்கமா இருந்து அம்மா பெயரைக் காப்பாத்துவா. நீ வாய்க்கு வந்ததை பேசாதே" என்றான்.

அந்த காலத்தில் தேவதாசி என்று ஒரு முறை இருந்தது. அந்தப் பெண்களே நடனமாடுவார்கள் பிற பெண்கள் ஆட மாட்டார்கள். பெரும்பாலும் கோவில் திருவிழாக்களில் பொது சாலைகளில ஆடுவார்கள் இவர்கள் கோயிலிலிருந்து ஊதியமும் பெற்றார்கள். அக்கால பெரிய மனிதர்களுக்கு ஆசை நாயகிகளாகவும் இவர்கள் வாழ்ந்தனர். பின்னர் 1937ல் இம்முறை வெள்ளைக்கார அரசாங்கத்தால் ஒழிக்கப்பட்டது குளத்துக்கு சுப்புணிக்கு கோபம் வர வர குஷியானது 'இவள்களுக்கெல்லாம் பரிந்துவரா. பஞ்சாட்சர பாகவதர் என்ன சொல்வார் தெரியுமா ஆடவந்தவ அரை தாசி பாடவந்தவ பரிதாசி என்று சொல்லிவிட்டு அவசரமாக கிளம்பினான் மேலும் இருந்தால சுப்புணி அடித்து விடுவான் என்ற பயம்.

பஞ்சாட்சர பாகவதர் என்றதும சுப்புணிக்கு கொஞ்சம் கோபம் தணிந்தது. பஞ்சாட்சர பாகவதர் நல்ல ஞானஸ்தன். அழகாக கதாகாலட்சேபம் செய்வார். தெலுங்கு, சமஸ்கிருதம் இரண்டிலும் வல்லவர். ஏராள சீடர்களும் உண்டு ஆனால் அதிர்ஷ்ட கட்டை வித்தைக்கு ஏற்ற விலாசம் கிடையாது. எனவே எல்லோரையும் குறைந்து பேசுவார்சுப்புணிக்கு அவர் மீது மதிப்பு உண்டு. ஏதோ விரக்தியில் பேசுகின்றார் என எண்ணுவான். அப்படி பேசிய பேச்சுதான் குளத்து சொன்னதாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டு கரையேறினான்.

சாட்சாத் பஞ்சாட்சர பாகவதர் எதிரில் வந்து நின்றார்.

(தொடரும்)

—1ம் பக்கத் தொடர்ச்சி

ஆரம்பித்தார். வெளிநாடுகள் பலமுறை சென்று வந்தவர். 1978ல் அமெரிக்கா, கனடா நாடுகள் சென்று 3 மாதகாலம் தங்கி கச்சேரிகள் செய்துள்ளார். ஏராள பட்டங்கள் பெற்றுள்ளார் 1981ல் தமிழக அரசு 'கலைமாமணி' பட்டம பெற்றார் தற்பொழுது பல நிகழ்ச்சிகளில் இவரும் அரித்துவாரமங்கலம் பழநிவேலும் சேர்ந்து ஜோடி தனித்தவில்களாக வாசிக்கின்றனர். இதற்கு ரசிகர்களிடையே நல்ல வரவேற்பு உள்ளது.

இவ்வாண்டு முத்தமிழ்ப் பேரவையில் இவரும் அவருடன இணைந்து 'லயச்செல்வம்' விருது பெறுகின்றார்.